இருக்கின்றன. பொருளாதாரத் துறையிலும், கல்வித் துறையிலும் அவர்கள் பின்தங்கிய நிலையில் இருப்பதால் அந்தச் சமூகங்களையாகிலும் அதிக பிற்பட்ட சமூகத்தவர் பட்டியலில் சேர்க்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது இல்லை.

*Drainage schemes*

* 610 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the work relating to Kandaparicharnur Drainage Scheme in Mannargudi taluk, Tanjore district, has been commenced;

(*b*) when it will be completed; and

(*c*) what is the total amount to be spent on the scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir. The work will be started immediately after the present irrigation season is over.

(*b*) It will be completed in two seasons, i.e., by July 1960.

(*c*) Rs. 4,81,000 (for works).

SRI A. VEDARATHNAM : இந்த வடிகால் ஜலத்தை கடை முனையிலே (டெயில் எண்ட்) பாசனத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்கின்ற உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா ? இல்லையானால், அதைப்பற்றிப் பரிசீலிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வடிகால் வசதி செய்து கொடுக்கப்பட்டு, 472 சில்லரை எக்கர் நிலத்திற்கு இரண்டாவது போகம் சாகுபடிக்கும் ஏற்பாடு செய்யப்படுகிறது.

*Publication of Cheap Editions of Tamil books*

MR. SPEAKER : The Hon. Member is not in his seat. The question and answer will be printed in the proceedings.

* 611 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have any proposal to undertake publication of cheap editions of books of literary interest in Tamil language; and

(*b*) if so, the books selected for publication?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Dam across Palar-Porandalar*

* 612 *Q.*—SRI N. R. THIAGARAJAN (on behalf of Sri P. S. K. Lakshmipathi Raj) : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether there is any proposal to take up and execute the scheme for the construction of a Dam across Palar-Parandalar river rising from Kodaikkanal in Palni taluk, Madurai district, during the Second Five-Fear Plan?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

29th September 1958]

Sri N. R. THIAGARAJAN : இந்தத் திட்டம் நீண்ட நாட்களாக பரிசீலனையில் இருக்கிறது. நீங்களே வந்து பார்த்திருக்கிறீர்கள். முதல் அமைச்சரும் வந்து பார்த்திருக்கிறார். நிதி அமைச்சரும் வந்து பார்த்திருக்கிறார். அந்த மக்கள் பெருவாரியாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். தயவுசெய்து அதைப் பரிசீலனை செய்து, அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திலாவது சேர்த்துக்கொள்ள முயற்சிப்பார்களா ?

The Hon. Sri P. KAKKAN : இந்தத் திட்டத்தைப்பற்றி ஒரு முறைக்குப் பலமுறை பரிசீலனை செய்துதான் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று இந்திய சர்க்காருக்கு அனுப்பப்பட்டது. இருந்தாலும், அதனால் பலன் அதிகம் இல்லை என்ற காரணத்தால், அது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது பிரதம என்ஜினீர் அவர்கள், இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில்தான் சேர்க்கவேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறார்கள். அதுவும், அமராவதித் திட்டம், மேட்டூர் கனல் திட்டம், லோயர் பவானி திட்டம் ஆகியவைகளை நடைமுறையில் பார்த்துத்தான் பிற்பாடு இதைப்பற்றி முடிவுக்கு வரவேண்டும்.

*Manangondanur Irrigation Schemes*

* 613 Q.—Sri A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலுகா, மானங்கொண்டான் ஆறுபாசன விஷயம் எந்த நிலையிலிருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The scheme has been completed in all respects including land acquisition.

Sri A. VEDARATHNAM : இதற்காக அரசாங்கம் செலவு செய்த பணம் அரசாங்கத்திற்கும் பயன் இல்லாமல், விவசாயிகளுக்கும் பயன் இல்லாமல், பாசன வசதி அளிக்காத காரணத்தால் வீணாகியிருக்கிறது. அங்கே விவசாயிகளுக்கு அதன்மூலம் பாசன வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அங்கே ஒரு காஸ்வே போட வேண்டியிருந்தது. இந்தத் திட்டத்தில் 450 ஏக்கர் நிலத்திற்கு வசதி ஏற்படும், 112 டன் அரிசி உற்பத்தி அதிகமாக ஏற்படும் என்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது.

*Police dogs and District Headquarters*

* 614 Q.—Sri S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to keep at least one dog in each district headquarters to assist the Police in the investigation of crimes?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : No, Sir.

Sri S. LAZAR : இதற்குத் தேவை இருக்கிறதென்பதை அரசாங்கம் உணருகிறதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : தேவை இருப்பது மட்டும் போதாது. இதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்யவேண்டும். நாய்களைக் கொடுத்தாலும், அந்த நாய்களை வைத்து வேலை வாங்குபவர்களுக்குப் பயிற்சி வேண்டும். ஆகையால், இந்தக் கஷ்டங்களை உத்தேசித்துத்தான் சென்னையிலே மட்டும் வைத்துக்கொள்வது என்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது.

Sri K. B. S. MANI : இம்மாதிரி உயர்ந்த ரகமான நாய்களைத் தனிப்பட்டவர்கள் வைத்திருந்தால், அந்த நாய்களை சர்க்கார் ட்ரெயினிங் சென்டருக்கு அனுப்பிப் பயிற்சி அளிப்பார்களா ? அதற்கான செலவுகளைச் சர்க்கார்